POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO. G. 6. TN. MS. C. P. P. 55 ANNA Leading Progressive Tamil Daily of the people

# நிதிவசூலித்துதராத சேர்மன்கள் மீது தி.மு.க. நடவடிக்கை

Regd. No. TN - MS [C] 244 Phone: 420212 4 பக்கம் விலை 60 காசு

அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 10 சென்னை 19-9-1986 வெள்ளி :- வெளியூர் 20 9 1986 சனி [இதழ் 323

## உள்ளாட்சிகளில் தி.மு.க. கொள்ளை தீவிரம்

சென்னை, செப். 19. தி.மு.க வசம் உள்ள நகரசபைகள், பஞ்சாயத்து யூனியன்கள் ஆகியவற்றில் உள்ள காண்ட்ராக்டர்கள் மற்றும் உள்ளாட்சியுடன் சம்பந்தப்பட்டவர்களிடம் நிதி வசூல் நடத்தி தருமாறு தி.மு.க. மேலிடம் வற்புறுத்தி வருகிறது. அப்படி நிதி வசூலிக்காத சேர்மன்கள் மீது தி. மு. க. மேலிடம் நடவடிக்கை எடுத்து வருகிறது.

உள்ளாட்சித் தேர்தலில் ஒரு சில இடங்களைப் பிடித்த கருணாநிதி, இனி நிதிவசூலை தாராளமாக நடத்தலாம் என்று கருதினார்.

"நிதி வசூலித்துத்தராத புள்ளிகளை அவர் திட்டி எழுதினார். "அவர் வெற்றி பெறுவதற்காக எவ்வளவுபாடு பட்டோம் நிதி கொடுக்காமல் இருக்கிறாரே" என்று கருணாநிதி உடன்பிறப்புக்கு கடிதம் எழுதினார்.

இதைத் தொடர்ந்து தி மு க. உள்ளாட்சித் தலைவர்கள் தீவிர வசூல் நடத்தினர். ஒருவர் ஒரே நாளில் 50 ஆயிரம் ரூபாய் வசூலித்து கருணாநிதியிடம் கொடுத்துவரவாய்ப்பைத் தார். இப்படி பலரும் வசூலித்து தினசரி நிதி கொடுத்தனர். கருணாநிதியிடம் அருப்புக்கோட்டை, நெல்லை தேர்தலில் கெடுபிடி வசூல்கள் தொடர்ந்தன.

நகரசபை நிலத்தை தனியாருக்கு விற்று ஒரு தி.மு.க.சேர்மன் வசூல் கொள்ளை நடத்தினார். இதனைக்கண்டித்து கழகமும், காங்கிரசும் போராட்டம் கூட நடத்தியது.

கொள்ளை வசூல் நடத்தி தி.மு.க மேலிடத்திடம் நிதி கொடுக்காத தி.மு.க. சேர்மன்கள் மீது நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது.

கடலூர் நகரசபைத் தலைவர் கே.எம். சுந்தரம் நிதிவசூல் செய்து கொடுக்காததால் தி. மு. க மேலிடம் சுந்தரம் மேல் புகார் கூறி தி. மு. க.விலிருந்து விலக்குவதாக அறிவித்தது தி. மு க. மேலிடத்தின் அந்த நடவடிக்கையை கண்டித்து கடலூர் நகரசபை தி. மு. க உறுப்பினர் எஸ். சி. சவுந்தரராசன் தி. மு. க. விலிருந்து ராஜினாமா செய்துள்ளார்.

தி.மு.க வைக் கண்டித்து சவுந்தரராசன் மற்றும் நகரசபை உறுப்பினர்கள் கே. கலிய பெருமாள் வழக்கறிஞர் பார்த்திபன் ஆகியோர் அறிக்கை வெளியிட்டுள்ளனர்.

### வேலூர் தேவராஜ்

வேலூர் நகர சபைத் தலைவராக வி. எம் தேவராஜ் (தி.மு.க.) உள்ளார். இவரும் சேர்மன் பதவியைப்பயன்படுத்தி வசூல்வேட்டை நடத்தி தி. மு. க மேலிடத்திடம் நிதி கொடுக்க வில்லை என்று தி மு. க. மேலிடம் புகார் கூறியுள்ளது.

இனியாவது ஒழுங்காக வசூல் கொள்ளை நடத்தி தி.மு.க.வின் கொள்கையை கடைபிடிக்க வேண்டும் என்று தேவராஜிடம் நேரில் சொல்வதற்கு மேலிடம் முடிவு செய்தது. ஆனால் மேலிடத்தாரை நேரில் சந்தித்துப் பேச தேவராஜ் மறுத்து விட்டதாகத் தெரிகிறது.

தி.மு க.வின் இந்த கொள்கையை கடைப்பிடிக்காத மேலும் சில சேர்மன்கள் மீதும நடவடிக்கை எடுக்கப்பட இருக்கிறது.

இந்த நடவடிக்கைக்குப் பயந்து தி. மு. க. சேர்மன்கள் எல்லாம் வசூல் கொள்ளையில் தீவிரமாக இறங்கி, மேலிடத்தின் அதிருப்தியிலிருந்து தப்பிக்க பாடுபட்டு வருகிறார்கள்.






லண்டன் செல்லும் சபாநாயகர் பி. எச். பாண்டியனுக்கு நெல்லை நண்பர்கள் சங்கம் வழியனுப்பு விழா நடத்தியது.

## போலீஸ் அதிகாரி மகன் எங்கே ?



சென்னை செப். 19— சென்னையில் போலீஸ் இன்ஸ்பெக்டர் மகன் ஒருவனை காணவில்லை அவனை யாராவது கடத்தி இருப்பார்களா என்று போலீசார் விசாரணை நடத்தி வருகின்றனர்

சென்னை காவல் துறை போக்கு வரத்து இன்ஸ்பெக்டராக பணியாற்றி வருபவர் பிரமானந்தன இவர் புதுப்பேட்டையில் உள்ள போலீசார் குடியிருப்பில் வசித்து வருகிறார். இவருடைய மகன் மதுசூதனன (வயது13). அவன் எழும்பூர் பிரசண்டேசன் பள்ளியில் 7-வது படித்து வருகிறான்,

கடந்த 17—ம் தேதி அவன் பள்ளிக்கு சென்றான். அன்று மாலை வீடு திரும்பவில்லை இது குறித்து அவனுடைய தகப்பனார் எழும்பூர் போலீஸ் நிலையத்தில் புகார் செய்தார் அந்த சிறுவனை யாராவது கடத்தி சென்றிருப்பார்களா என்று போலீசார் விசாரணை செய்து வருகிறார்கள்.

## விவசாயக்கடன் வட்டி ரூ. 20 கோடி தள்ளுபடி: அமைச்சர் அறிவிப்பு

தஞ்சாவூர், செப், 19— கடந்த ஆண்டு ஜூலை முதல் இந்த ஆண்டு மார்ச்வரை செலுத்தப்பட்ட கூட்டுறவு கடன் மீதான வட்டித்தொகை ரூபாய்20கோடிவரை கழக அரசு விவசாயிகளுக்கு திருப்பி கொடுக்கும் என்று கூட்டுறவுத்துறை அமைச்சர் சாத்தூர் ராமச்சந்திரன் அறிவித்தார்.

கூட்டுறவு சங்கங்களில் இருந்து தமிழக விவசாயிகள் வாங்கிய கடன் மீதான வட்டி மற்றும் அபராத வட்டித்தொகை ரூபாய்125 கோடி வரை தமிழக அரசு தள்ளுபடி செய்யும் என்று முதல்வர் புரட்சித்தலைவர் ஏற்கனவே அறிவித்துள்ளார்.

இந்தச் சலுகை சிறு விவசாயிகளுக்கு அளிக்கப்படும் என்றும் புரட்சித் தலைவர் அரசு அறிவித்தது தெரிந்ததே.

### வங்கியின் புதிய கிளை

தஞ்சை மாவட்டம் கும்பகோணம் மத்திய கூட்டுறவு வங்கியின் கிளை ஒன்றை முத்துப் பேட்டையில் திறந்து வைத்துப் பேசிய கூட்டுறவுத்துறை அமைச்சர் சாத்தூர் ராமச்சந்திரன் இது பற்றி குறிப்பிட்டார்.

ரூபாய் 8 லட்சம்செலவில் கட்டப்பட்ட இந்த கிளை அலுவலக திறப்பு விழாவுக்கு வணிகவரித் துறை அமைச்சர் வீராசாமி தலைமை வகித்தார்,

சாத்தூர் ராமச்சந்திரன் பேசுகையில் கூறியதாவது:—

தமிழக விவசாயிகளுக்கு புரட்சித்தலைவர் அரசு பல்வேறு உதவிகளை செய்து வருகிறது. சிறு விவசாயிகள் மேம்பாட்டையும் திட்டங்களை புரட்சித்தலைவர் சீரிய முறையில் செயல் படுத்தி வருகிறார்.

ஏற்கனவே புரட்சித் தலைவர் அறிவித்தபடி கூட்டுறவு கடன் மீதான வட்டித் தொகை மற்றும் அபராத வட்டித் தொகை ரூபாய் 125 கோடி வரை தள்ளுபடி செய்யப்படும்.

சில விவசாயிகள் தங்கள் கடன் மீதான வட்டித் தொகையை செலுத்தியுள்ளனர்.

கடந்த ஜூலை மாதம் முதல் இந்த ஆண்டு மார்ச் வரையிலான வட்டிமற்றும் அபராத வட்டித் தொகை ரூபாய் 20 கோடி வரை திருப்பி கொடுக்கப்படும்.

தங்களது கடன்மீதான வட்டியையும். அபராத வட்டியையும் செலுத்தியவர்கள் அதை திருப்பப் பெறுவார்கள்.

இவ்வாறு அமைச்சர் சாத்தூர் ராமச்சந்திரன் கூறினார்.

### சென்னை கிரிக்கெட் ஸ்கோர்

சென்னை, செப். 19— ஆஸ்திரேலியா - இந்தியா ஆகிய அணிகளுக்கிடையே சென்னையில் நடைபெறும் முதல் கிரிக்கெட் டெஸ்ட் ஆட்டத்தின் 2 வது நாளான இன்று இடைவேளை வரை ஆஸ்திரேலியா 3 விக்கெட் இழப்பிற்கு 316 ரன்கள் எடுத்திருந்தது.

இன்றைய ஆட்டத்தில் மேலும்இரண்டுவிக்கெட்டுகள் வீழ்ந்தன.

டீன் ஜோன்சும், ஆஸ்திரேலியா அணித்தலைவர் அலன் போர்டரும் தொடர்ந்து விளையாடுகிறார்கள்.

இடைவேளை வரை ஆஸ்திரேலியா மொத்தம் எடுத்த ரன்கள் 316.

## குண்டர்கள் தடுப்பு சட்டத்தில் ஆசாமி கைது

சென்னை, செப் 19— சென்னை வேப்பேரியை சேர்ந்தவர் மணி. (வயது 45) இவர் 7 முறை சிறை சென்றவர். ஓடும் பஸ்சில் ஒருவரிடம் ரூபாய்4 ஆயிரம் கொள்ளை அடித்ததை தொடர்ந்து மணி கைது செய்யப்பட்டார். குண்டர்கள் தடுப்பு சட்டத்தின் கீழ் அவர் ஓராண்டு சிறை வைக்கப்பட்டார்,

## சமையல் எண்ணெய் விலையை குறைக்க கழக அரசு நடவடிக்கை

சென்னை, செப். 19— சமையல் எண்ணெய் விலையை குறைக்க புரட்சித்தலைவர் அரசு நடவடிக்கை எடுத்துள்ளது.

உயர்ந்துள்ள விலையை குறைக்க அதிகபட்ச விலை நிர்ணயிக்கப்படும் என்றும் அமைச்சர் திருநாவுக்கரசு தெரிவித்தார்,

சென்னை கோட்டையில் சமையல் எண்ணெய் உற்பத்தியாளர்கள் வியாபாரிகள் சங்க பிரதிநிதிகளோடு கடலை எண்ணெய், நல்லெண்ணெய் விலையை குறைக்க பேச்சுவார்த்தை நடத்தப்பட்டது.

இந்த எண்ணெய் வகைகளின் விலை உயர்ந்திருக்கிறது என்று அமைச்சர் திருநாவுக்கரசு சுட்டிக் காட்டினார். விலையை குறைக்க வியாபாரிகள் முன் வரவேண்டும் என்றும் திருநாவுக்கரசு தெரிவித்தார்.

அடுத்த கூட்டம் இம்மாதம் 30—ந் தேதி நடைபெறும். அப்போது மீண்டும் பேச்சு வார்த்தை நடக்கும். கடலை எண்ணெய் நல்லெண்ணெய் வகைகளுக்கு வியாபாரிகளே சுய கட்டுப்பாடு செய்து கொள்ளும் வகையில் அதிக பட்ச விலை நிர்ணயம் செய்துகொண்டு வாருங்கள் என்று அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்.

அரசின் சார்பிலும் அதிகபட்ச விலை பற்றி நிர்ணயம் செய்யப்படும். கடந்த ஆண்டு சராசரி கிலோ 15 ரூபாயாக இருந்தது. இப்போது அது அதிகமாகி இருக்கிறது. 3 லட்சத்து 60 ஆயிரம் டன் கடலை எண்ணெய் நமக்குத் தேவைப்படுகிறது. எண்ணெய் தயாரிக்கும் ஆலைகள் 80 டன்னுக்கு மேல கையிருப்பு வைத்து கொள்ளக்கூடாது அதற்கு மேல் இருந்தால அந்த எண்ணெய் கைப்பற்றப்படும். வெளிமாநிலத்திற்கு அனுப்பாமல் இங்கேயே விற்கப்பட வேண்டும். என்று அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார.

30-ந் தேதிக்கு பிறகு எண்ணெய்க்கு அதிகபட்ச விலை நிர்ணயிக்கப்படும் என்றும் திருநாவுக்கரசு கூறினார்.

## பாதலை கொல்ல நடந்த முயற்சி: போலீஸ் முறியடிப்பு

சண்டிகர். செப் 19— போட்டி அகாலிக்கட்சித் தலைவரான பிரகாஷ்சிங் பாதலை கொலைசெய்ய நடந்தமுயற்சி முறியடிக்கப்பட்டது,

பஞ்சாப் மாநிலத்தில் குர்தாஸ்பூர் மாவட்டத்தில் தீவிரவாதிகள் ஓய்வுபெற்ற போலீஸ் அதிகாரிஒருவரையும், கணவன் மனைவி இருவரையும் சுட்டனர்.



### கொலை முயற்சி முறியடிப்பு

இதில் ஓய்வு பெற்ற போலீஸ் அதிகாரி இறந்தார்.

இதற்கிடையில் போட்டி அகாலிகட்சித் தலைவரான பிரகாஷ்சிங் பாதலை கொல்ல நடந்த ஓர் முயற்சியை முறியடித்துவிட்டதாக ஜலந்தர் போலீசார் தெரிவித்துள்ளனர்.

கடந்த 24 மணி நேரத்தில் 7 தீவிரவாதிகள் கைது செய்யப்பட்டுள்ளதாகவும் போலீசார் தெரிவித்துள்ளனர்.

குர்தாஸ்பூர் மாவட்ட போலீஸ் அதிகாரி ஜே. பி. பிர்டி கூறுகையில் மாடுலாவலாவை, சேர்ந்த சாந்த்நாம் சிங் என்ற தீவிரவாதி கைது செய்யப்பட்டுள்ளதாகவும இதன் மூலம் பாதலை கொலை செய்ய நடந்த முயற்சி முறியடிக்கப்பட்டுள்ளதாகவும் கூறியுள்ளார்.

பாதலைக்கொல்ல நடந்த முயற்சியை அடுத்து அவருக்கு பலத்த போலீஸ் பாதுகாப்பு போடப்பட்டுள்ளது.

குருதாஸ்பூர் மாவட்டத்தில் போலீசார் தீவிரவாதிகளை தொடர்ந்து வலைவீசி தேடி வருகிறார்கள்.

## காவிரியில் நீர்கேட்டு தமிழகம் கடிதம்

சென்னை, செப். 19— காவிரியில் 30 டி. எம். சி. தண்ணீர் விடுமாறு கர்னாடக அரசை கேட்டுக்கொண்டு கர்னாடக அமைச்சர் தேவேகவுடாவுக்கு அமைச்சர் யூசுப் கடிதம் எழுதியுள்ளார்.

20 ந்தேதிமுதல்15 நாட்களுக்கு மேட்டூர் அணையில் 19ஆயிரம் கனஅடி வீதம் தண்ணீர் திறந்து விடப்படும்,

# விடுதலைப்புலிகள் - ராணுவம் கடும் போர்

## மட்டக்களப்பு நகரம் காலியானது

கொழும்பு, செப். 19— இலங்கையில் விடுதலை புலிகளுக்கும் சிங்கள ராணுவத்துக்கும் கடும யுத்தம் நடக்கிறது.

இலங்கையில் மட்டக் களப்பு பகுதியில் சிங்கள ராணுவம் அப்பாவி மக்கள் மீது தாக்குதல் நடத்தியது. இதில் 12 பேர் இறந்தனர்.

ஆகவே விடுதலைப் புலிகள் களத்தில் இறங்கினார்கள். இதைத் தொடர்ந்து கடும் யுத்தம் நடந்தது.

மட்டக்களப்பில் பஸ் நிலையத்தில் நின்ற பஸ்களில் குண்டுகள் வைக்கப்பட்டன. தனியார் கார் ஒன்றிலும் குண்டு வைக்கப்பட்டது அந்த குண்டுகள் வெடித்து பலத்த சேதம் ஏற்பட்டது. பலா இறந்தனர். இறந்தவர்கள் எண்ணிக்கை 12 பேருக்கு மேல் இருக்கும் என்று ஒரு தகவல கூறுகிறது.

சிங்கள ராணுவத்தைச் சேர்ந்த சிலர் இதில் காயம் அடைந்தனர்.

குண்டு வெடித்ததைத் தொடர்ந்து பயங்கர தீ விபத்து ஏற்பட்டது. அருகிலுள்ள கடைகளுக்கு தீ பரவியது. மட்டக்களப்பு நகர வீதி போர்க்களம் போல் ஆனது.

கடைகள் அனைத்தும் மூடப்பட்டன, பள்ளிகளும் மூடப்பட்டன. சிங்கள ராணுவத்தினர் தமிழர்களை கண்மூடித்தனமாகத் தாக்க முற்பட்டனர். இதனால் பலா நகரை காலி செய்துவிட்டு பதறி அடித்து வெளியேறினா.

மட்டக்களப்பை ஒட்டியுள்ள பண்முனை என்கிற இடத்தில கடும போா நடந்து வருகிறது மண்முனை என்ற இடத்தில உள்ள ஆயிரத்துக்கு மேற்பட்ட குடும்பங்கள் அங்கிருந்து வெளியேறின.

மங்குலம் என்ற இடத்திலுள்ள ராணுவ முகாமிலிருந்து சிங்கள ராணுவர் வெளியேறி தமிழர்களை தாக்க முற்பட்ட போது விடுதலைப் புலிகள் எதிர்த் தாக்குதல் நடத்தினர். இதனால் போர் மூண்டது.

### மண்டபத்தில் ரூ. 12 லட்சம் செலவில் மருத்துவமனை

ராமநாதபுரம், செப். 19- ராமநாதபுரம் மாவட்டம் மண்டபம் நகரில் 10 படுக்கை கொண்ட புதிய மருத்துவமனை 12 லட்ச ரூபாய் செலவில் கட்டப்படுகிறது. வட்ட ஆட்சித்தலைவர் ராகவன் தலைமையில் இதற்கான அடிக்கல்நாட்டு விழா நடைபெற்றது.

அமைச்சர் ராமசாமி அடிக்கல நாட்டினார். விழாவில் சிக்கந்தர், சேகு அப்துல்காதர், அன்வர் ராஜா, டாக்டர்கள் சடையப்பன், பன்னீர்செல்வம் ஆகியோர் கலந்து கொண்டனர்.

### கழக மாணவர்கள் வெற்றி

திண்டிவனம், செப். 19— தென் ஆற்காடு மாவட்டம் திண்டிவனம் ஏ. கோவிந்தசாமி அரசு கலைக்கல்லூரியில் நடைபெற்ற கல்லூரிப் பேரவை மற்றும் பல்வேறு துறைகளுக்கான தேர்தலில் கழக மாணவர்கள் பெருவாரியான வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெற்றனர்.

கல்லூரி பேரவைத் தலைவராக த. ராஜ்குமார் செயலாளராக தே. மோகன் தமிழ் மன்றச் செயலாளராக குணசேகரன், ஆங்கில இலக்கியச் செயலாளராக பழனி, கணிதவியல் துறை செயலாளராக சம்பத் வணிகவியல் துறைசெயலாளராக சந்திரசேகரன் ஆகியோர் வெற்றி பெற்றனர்.

வெற்றி பெற்ற கழக மாணவர்களுக்கு கழக மாணவர் அணிச் செயலாளர் கா. லியாகத்அலிகான் தென்ஆற்காடு மாவட்ட மாணவர் அணி அமைப்பாளர் முருகுமணி, துரை ராஜமாணிக்கம் ஆகியோர் வாழ்த்துக் கூறினர்.

# மேற்கு வங்க வளர்ச்சி திட்டத்திற்கு ரூ684கோடி பிரதமர் ராஜீவ் அனுமதி

கல்கத்தா, செப். 19— மேற்கு வங்காளம் சென்றுள்ள பிரதமர் ராஜீவ்காந்தி அந்த மாநிலவளர்ச்சி திட்டங்களுக்காக ரூபாய் 684 கோடி நிதிஉதவிக்கு அனுமதி வழங்கினார்.

கேரளமாநிலத்தில் மேற்கொண்டிருந்த சுற்றுப் பயணத்தை முடித்துக் கொண்டு பிரதமர் ராஜீவ் காந்தி கல்கத்தா சென்றுள்ளார். மேற்கு வங்காளத்தில் அவர் சுற்றுப் பயணம் செய்யவிருக்கிறார்.

மாநிலங்களுக்கான வளர்ச்சி திட்டங்கள் பற்றி அந்தந்த மாநில அரசுகள் புதுடெல்லிக்கு அனுப்பும் திட்டங்கள்பற்றி முடிவெடுக்க காலதாமதம் ஆகிறது. முதல் அமைச்சர்களோ அல்லது ஒரு இலாகாவை சேர்ந்த வேறு அமைச்சர்களோ புதுடெல்லி செல்லும்போது சம்பந்தப்பட்ட மத்திய அமைச்சர்களைசந்தித்தும் பேசி முடிவெடுக்க சில வேளைகளில் சாத்தியப்படுவதில்லை. அப்படி முடிவெடுக்கப்பட்ட தீர்மானங்களுக்கு அனுமதி வழங்குவது பற்றி பரிசீலனை செய்ய பிரதமருக்கு நேரமும் சில வேளைகளில் இருப்பதில்லை.

இதனால் வளர்ச்சித் திட்டங்கள் உருப்பெறுவதில் காலதாமதம் ஆகின்றன.

இப்படி ஏற்படும் காலதாமதத்தை போக்கி உடனுக்குடன் பைசல் செய்வதற்கான திட்டம ஒன்றை பிரதமர் ராஜீவ் காந்தி துவக்கியுள்ளார்.

இதன்படி மாநிலங்களுக்குச் சென்று அங்கேயே வளர்ச்சித் திட்டங்களை பேசி முடிவு செய்ய பிரதமர் இந்தத் திட்டத்தை அமல்படுத்தியுள்ளார்.



நேற்று கல்கத்தாசென்ற பிரதமர் ராஜீவ் மேற்கு வங்க முதல் அமைச்சர் ஜோதிபாசுவுடன்சுமார் 7 மணிநேரம் ஆலோசனை நடத்தினார். பல்வேறு பொருளாதார திட்டங்கள் குறித்தும் அவர் பரிசீலித்தார். பல்வேறு வளர்ச்சித் திட்டங்களுக்கான அனுமதி கோரி மத்திய அரசுக்கு அனுப்பப்பட்டுள்ள மனுக்களையும் பிரதமர் பரிசீலித்தார். இலாகா பூர்வமான கோரிக்கைகளையும் அவர் ஆராய்ந்தார்.

சணல உற்பத்தி, பஞ்சாலை, துணி உற்பத்தி நலிந்த ஆலைகள் பற்றிய கோரிக்கைகள். காகித உற்பத்தி, பொதுவாக மேற்கு வங்காளத்தில் தொழில் வளம் பெருகுவது இப்படி பல்வேறு துறைகள் பற்றிய வளர்ச்சித் திட்டங்களை அவர் பரிசீலனை செய்தார்.

பொதுவாக மேற்கு வங்காள பொருளாதார வளர்ச்சித் திட்டங்களுக்கான 684 கோடி ரூபாய் நிதி உதவிக்கு பிரதமர் ராஜீவ் அப்போதே அனுமதி வழங்கினார்.

சிமெண்ட் மற்றும்பல்வேறு பொருள்களை சேமித்து வைக்க பயன்படும் சணல் பைகளை ஒரு தடவைக்கு மேல் பயன்படுத்த வேண்டாம்என்றும் பிரதமர்கேட்டுக் கொண்டார். பழைய கோணிப்பைகளை மீண்டும் பயன்படுத்துவது நல்லதல்லமேலும்புதியபைகளை பயன்படுத்துவதால் பொருள்களும் சிறப்பான முறையில் பாதுகாக்கப்படும் மேன்மேலும் சணல் பைகள் அதிக எண்ணிக்கையில் செலவாகும் என்றார்

குஜராத் மாநில திட்டத்தின் கீழ் நலிவுற்ற ஆலைகள் அனைத்தையும் மேற்கு வங்காளத்தில் நாட்டுடைமையாக்குவதற்கும் பிரதமர் அப்போது ஒப்புதல் அளித்தார்.

ராஜீவ் காந்தி நிருபர்கள் கூட்டத்திலும் பின்னர் பேசினார். நிருபர்கள் கேட்ட கேள்விகளுக்கு அவர் திட்டவட்டமாக பதில் அளித்தார்.

அப்போது அவர் கூறியதாவது.

மேற்குவங்காலத்திற்கு மத்திய அரசு பாரபட்சம் காட்டுகிறது என்று சொல்லப்படுவதை அவர் மறுத்தார் இது ஒரு சிறுபிள்ளை வாதம் எந்த மாநிலத்தையும் மத்தியஅரசுபுறக்கணிக்கவும் இல்லை மாற்றாந்தாய் மனப்பான்மையுடன் பார்க்கவும்இல்லை மேற்கு வங்க அரசு தனது கோரிக்கைகளுக்கு அரசியல் சாயம் பூசி வருகிறது. இது தவறான போக்கு 6 வது ஐந்தாண்டு திட்டத்தை முறையாக செயல்படுத்தவில்லை.

மின் உற்பத்திக்காக வழங்கப்பட்ட நிதி உதவியை 30 சதவிகிதம் மேற்குவங்க அரசு செலவு செய்யவே இல்லைஇதுவும்கண்டிக்கத் தக்கது.

இந்திய குடியுரிமை வேண்டி ஆர்ப்பாட்டம செய்து வரும் கூர்க்கா பிரிவினர் வாதம் ஒத்துக் கொள்வதாக இல்லை

இந்தியாவில் உள்ள நேபாளிகள் இந்திய குடியுரிமை கோருகிறார்கள் மாநில அடிப்படையில் சில பகுதிகளைமாற்றி அமைப்பதற்காக அரசியல் சட்டத்தை திருததுவதற்கு ஆட்சேபணை இல்லை.

அணு ஆயுதங்களை உற்பத்தி செய்ய சீனாவுடன் பாகிஸ்தான் ஒப்பந்தம் செய்து கொண்டுள்ளது கவலை அளிக்கக் கூடியதாக இருக்கிறது. இது ஆசியப்பகுதியில் அமைதியை பாதிக்கும வகையில் உள்ளது.

சுப்ரீம் கோர்ட்டின் தீர்ப்பை அடுத்து தேசிய கீதத்தை மற்றும் வந்தே மாதரம் எதுவும் மத்திய அரசுக்கு இல்லை.

இவ்வாறு பிரதமர் கூறினார். முன்னதாக மேற்கு வங்காள அமைச்சர்கள் அதிகாரிகள் ஆகியோருடன் அவர் ஆலோசனை நடததினார் கல்கத்தா விமான நிலையத்தில் அவரை கவர்னர், முதல் அமைச்சர் மற்றும் சக அமைச்சர்கள் வரவேற்றனர்.

### நாட்குறிப்பு

**துறைமுகம்**

காலம் 20-9-86 மாலை 7மணிக்கு பொதுக்கூட்ட இடம். சௌகார்ப் பேட்டை போஸ்டாபீஸ் அருகில் தங்கசாலை.தெரு, தலைமை, கே. எல்லப்பன் பேசுவோர். ஆலடி அருணா எம் பி. அறிவுடைநம்பி எம்.வி.இராமன் மண்ணடி கிருஷ்ணமூர்த்தி. கு கஜேந்திரபாபு, எம.எஸ். மணி என்.ஏ. துரை, எல்.குமார் வி. அருள, எம். ராமதாஸ் கே. பாலன் டி. எஸ். சேகர் என். துரை, எம்.டி. வேலு மற்றும்பலர்

நன்றி தீனதயாளன்.

### குத்தகை விவசாயிகள் பாதுகாப்பு சட்டம்: ஜனாதிபதி ஒப்புதல்

சென்னை, செப். 19— தமிழக புயல்- வெள்ள பாதிப்புப்பகுதிசாகுபடி குத்தகையாளர (சிறப்புப் பிரிவு) மசோதாவுக்கு குடியரசு தலைவர் ஜைல் சிங் ஒப்புதல் அளித்துள்ளார்.

புயல்—வெள்ளபாதிப்புப் பகுதிகளில் குத்தகை செலுத்தாமல் இருந்தால் குத்தகைபாக்கியைஇரண்டு ஆண்டுகளில [1986 செப்டம்பர் 30-ம தேதி முதல் 1988 செப்டம்பர் 30ம தேதி வரை] தவணை முறையில் திருப்பி செலுத்த இந்த மசோதா வகை செய்கிறது

கடந்த 1980 ஜூன் 30-க்கும் முன்னதாக செலுத்த வேண்டிய குத்தகை பாக்கியை கட்டாமல இருந்ததற்காக 1984 ஜூன் 1-ம தேதியன்றோ அதன் பிறகோ வெளயேற்றப் பட்ட குத்தகை விவசாயிகள் மீண்டும் நிலத்தை கையகப் படுத்தவும் இந்தமசோதா வகை செய்கிறது.

### சென்னையில் வைரம் போன்ற கற்கள் ஏலம்

சென்னை செப் 19— மிக விலை உயர்ந்த வைரம் போன்ற கற்கள் 26-ந் தேதியன்று காலை 10 மணிக்கு சென்னை கஸ்டம் அவுசில் ஏலம் விடப்படுகிறது.

ஏலத்தில் விட இருக்கும் பொருட்களை 24,25 ஆகிய தேதிகளில் காலை 10 மணி முதல் ஒரு மணிவரை பொதுமக்கள் பார்வையிடலாம் என்று தெரிவிக்கப் பட்டுள்ளது.

# காமன்வெல்த் சபைக்கு புரட்சித்தலைவரின் உருவம் பதித்த பரிசு

## சபாநாயகர் பாண்டியன் வழங்குகிறார்

சென்னை செப் 19— காமன்வெல்த் சபைக்கு முதல்வர் புரட்சித தலைவரின் உருவம் பொறித்த மிகப்பெரிய தஞ்சாவூர் தட்டை தமிழக சபாநாயகர் பி.எச். பாண்டியன் வழங்குகிறார்.

தமிழக சட்டமன்ற சபாநாயகர் பி.எச். பாண்டியன் 32வது காமன்வெல்த் பாராளுமன்ற மாநாட்டில கலந்து கொள்வதற்காக லண்டன் செல்கிறார்.

காமன்வெல்த் பாராளுமன்ற அமைப்பின் தமிழ்நாடு கிளை தலைவராக சபாநாயகர் பி. எச். பாண்டியன் இருந்து வருகிறார்.

### லண்டனில் மாநாடு

காமன்வெல்த் பாராளுமன்றத்தின் 32-வது மாநாடும் காமன்வெல்த்தின் 75-வது ஆண்டு விழாவும் நடைபெறுகிறது.

இந்த மாநாடு இங்கிலாந்தின் தலைநகரான லண்டனில் இந்த மாதம் 23ந் தேதியில் இருந்து அக்டோபர் மாதம் 2ந் தேதி வரையில் நடக்கிறது

இந்த மாநாட்டில் பாராளுமன்ற சபாநாயகர் பல்ராம்ஜாக்கா தலைமையில் இந்தியா முழுவதும் உள்ள அனைத்து மாநிலங்களின் சபாநாயகர்கள் கலந்து கொள்கிறார்கள்.

தமிழக சபாநாயகர் பி எச் பாண்டியன் இந்த மாநாட்டில் கலந்துகொள்வதற்காக வருகிற திங்கட்கிழமை மாலை 4-20 மணிக்கு சென்னையில் இருந்து விமானம் மூலம் பம்பாய் செல்கிறார்,

அங்கிருந்து, 23-ந்தேதி அதிகாலை 4-4 மணி விமானத்தில்லண்டன்புறப்படுகிறார்,

அக்டோபர் மாதம் 2-ந் தேதிவரை லண்டனில் நடக்கும் காமன்வெல்த் பாராளுமன்ற மாநாட்டில் கலந்து கொள்கிறார்

அந்த மாநாட்டில் அவர் 'பாராளுமன்ற அரசுக்கு எதிர்காலம் இருக்கிறதா? அதற்கு எவ்வாறு பலம் சேர்க்கவேண்டும்? காமன் வெலத் பாராளுமன்ற சங்கத்தின் பணிகள் என்ன? ஜனநாயக முடிவுகளை உருவாக்குவதை மாநிலங்களுக்கும் மற்ற அமைப்புகளுக்கும பரவலாக்குவது என்ற தலைப்புகளிலும 'காமன்வெல்த்-பார அதைபற்றி கவலைப்படுவார்கள்?" என்ற தலைப்பிலும் பேசுகிறார்.

மாநாடு முடிந்ததும் லண்டனில் இருநது புறப்பட்டு ஸ்பெயின் டென்மார்க், நார்வே, ஸ்வீடன் ஹாலந்து. பெல்ஜியம் மேற்கு ஜெர்மனி. ஆகிய நாடுகளுக்கு சுற்றுப்பயணம் செல்கிறார்.

அந்த நாடுகளில் உள்ள சபாநாயகர்களைசந்தித்து பேசுகிறார். அந்த நாடுகளின் பாராளுமன்றங்கள் எவ்வாறு இயங்குகின்றன? எவ்வாறு சட்டம் இயற்றுகிறார்கள் என்பதை நேரில் கேட்டறிகிறார்.

வெளிநாடுகளில் வாழும் தமிழர்கள் அளிக்கும் வரவேற்புகளில் கலந்து கொண்டு அக்டோபர் 16-ந தேதி சென்னை திரும்புகிறார்.

காமன்வெல்த் பாராளுமன்ற கட்டிடத்தில் வேறு நாடுகளின் நினைவு சின்னங்கள் வைக்கப்பட்டுள்ளன,



இந்த கட்டிடத்தில் நினைவுபரிசாக வைப்பதற்காக கண்ணாடிபேழையில் வைக்கப்பட்ட முதலவர் புரட்சித்தலைவரின்உருவம் பொறித்த மிகப்பெரிய தஞ்சாவூர தட்டு ஒன்றை சபாநாயகர் பி.எச். பாண்டியன் எடுத்துச்செல்கிறார்.

# தஞ்சை-திருச்சி மாவட்டங்களில் பரவலாக மழை

திருச்சி, செப், 19— தஞ்சை-திருச்சி மாவட்டங்களில் கடந்த 3 நாட்களாக பரவலாக மழை பெய்துள்ளது. மேட்டூர் அணை திறந்து விடப்பட்டுள்ளதால் தஞ்சாவூர, திருச்சி ஆகிய மாவட்டங்களில் தற்போது விவசாயப்பணிகள் தீவிரமாக நடைபெற்று வருகிறது. சம்பா பயிருக்கான நாற்று விடப்பட்டுள்ளது.

இந்நிலையில் கடநத 3 நாட்களாக தஞ்சை-திருச்சி ஆகிய மாவட்டங்களில பரவலாக மழை பெய்துள்ளது.

திருச்சியில் கடந்த 24 மணி நேரத்தில் மேலணையில் 29 மில்லி மீட்டர், லால்குடியில் 10 மில்லி மீட்டர், குளித்தலை மணப்பாறையில் தலா 2 மில்லி மீட்டர் மழை பெய்துள்ளது.

தஞ்சை மாவட்டத்திலும் பரவலாக மழை பெய்துள்ளது.

### மேட்டூர் அணை நீர்மட்டம்

மேட்டூர் அணையின் நீர் மட்டம்நேற்று 76.5 அடியாக இருந்தது.

அணைக்கு விநாடிக்கு 22 ஆயிரத்து 600 கன அடி தண்ணீர வருகிறது.

அணையில் இருந்து விநாடிக்கு 15 ஆயிரம் கன அடித்தண்ணீர விடப்படுகிறது.

தற்போது பெய்துள்ள மழை சம்பா பயிருக்கு பெரிதும் பயன் தரும் எனக்கருதப்படுகிறது.

# ஏழை-எளியோர்கட்கு தொண்டாற்ற புதிய சேவை சங்கம்

## ஜே சி டி. பிரபாகரன் துவக்கி வைத்தார்

சென்னை. செப். 19— ஏழை-எளிய மக்களுக்கு தொண்டாற்ற புதிய சங்கம் ஒன்றைஇளைஞர் அணி செயலாளர் ஜே சி.டி. பிரபாகரன் துவக்கி வைத்தார்.

லயன்ஸ்சங்கம், ரோட்டரி சங்கம் போன்று இந்த சங்கம் அபக்ஸ் கிளப் என்ற பெயரில் உள்ளது.

அபக்ஸ் கிளப் சார்பில் மெட்ராஸ் காஸ்மாஸ் மெட்ராஸ் மெரீனா என்ற கிளைகளை ஜே சி டி பிரபாகரன் மெழுகுவர்த்தி ஏற்றி வைத்து துவக்கி வைத்தார்.

துவக்க விழாவுக்கு இந்த கிளப்பின் தேசியதலைவர் எம்.எஸ். மதிவாணன் தலைமை வகித்தார்.

மெட்ராஸ் காஸ்மாஸ் தலைவராக வழக்கறிஞர் ராமமோகனுக்கும், மெட்ராஸ் மெரீனா தலைவராக டாக்டர் செல்வராஜுக்கும் பொறுப்புகளை மதிவாணன் ஒப்படைத்தார்

துவக்க விழாவில் ஒட்டேரி சேத்துப்பட்டில் உள்ள ஆதிதிராவிட நலப்பள்ளி மீனாம்பாள் சிவராஜ் பள்ளி மாணவ- மாணவிகள் 50 பேருக்கு நோட்டுப் புத்தகங்களையும் பென்சில்களையும் ஜே சி. டி. பிரபாகரன் வழங்கினார்.

புதிய கிளைகளைத் துவக்கி வைத்து ஜே. சி. டி பிரபாகரன் வாழ்த்துரை வழங்கினார்.



# 17 வயது இளம் பெண் கற்பழிப்பு: கொலைக்கு மேல் நடந்த கோரக் கொலை

மதுரை, செப். 19— பதினேழு வயது இளம் பெண் ஒருத்தி கொடூரமாக ராணுவ வீரன் ஒருவனால கற்பழிக்கப்பட்டாள்.

இந்தக் கற்பழிப்பைத் தொடர்ந்து இரண்டு கொலைகள் நடந்தன. கற்பழிப்புக்கு ஆளான அந்தப் பெண் விஷம் அருந்தினாள்.

இந்த துயர சம்பவம் மதுரை மாவட்டத்தில் தேனி அருகேஉள்ள கோட்டூர் கிராமததில் நடந்துள்ளது

இந்த நெஞ்சை உருக்கும் சோக சம்பவம் பற்றிய விவரம் வருமாறு—

ராணுவ வீரன் ஒருவன் கடந்த வாரம் இந்தப் பெண்ணைக் கற்பழித்து விட்டதாகக் கூறப்படுகிறது.

இந்த சம்பவம் குறித்து அந்தப் பெண்ணின் தந்தை ஊர் பஞ்சாயத்திடம் விசாரிக்கும்படி கோரினாராம்.

அதன்படி அந்த ஊர் பஞ்சாயத்து கூடி இருதரப்பாரையும் விசாரணைக்குஅழைத்தது. இருதரப்பாரும் விசாரணை இடத்திற்கு வந்தனா.

தான பெற்ற மகளை காமுகன் ஒருவன் கற்பழித்து விட்டானே என்று கூறி இருந்த அந்தப் பெண்ணின் தந்தை அந்தக் காமுகனைக் கண்டதும் வெறி கொண்ட வேங்கையாக மாறி சீறி எழுந்து விட்டாராம்.

தன் மகளைக் கற்பழித்த அந்தக்காமுகனை கையில் இருநத அரிவாளால வெட்டி வெட்டித் தன் ஆத்திரத்தை தீர்த்துக் கொண்டார.

அந்த காமந்தகாரன் அந்த இடத்திலேயே சுருண்டு விழுந்து மரணம் அடைந்தான்

இந்தக்கொலைச் செய்தி எங்கும் பரவி விட்டது.

கொலையுண்ட ராணுவ வீரனது மைத்துனர் வெறியோடு அந்தப் பெண் வீட்டுக்குப் போனாராம்.

தனது உறவினரைக் கொன்றவரின் மகனான அந்தப் பெண்ணின் சகோதரனை அரிவாளால வெட்டினாராம.

படுகாயம் அடைந்த அந்தவாலிபர் மருத்துவமனைக்கு எடுத்துச் செல்லப்படும்போது மரணம் அடைந்தார்.

தன் கற்புப்போய் அதன் விளைவால தன்னைக் கற்பழித்தவன் இறக்க-தனது சகோதரனும் இறக்க நேரிட்டதைப் பார்த்து அந்தப்பெண் மனம் வெதும்பி விஷம் அருந்தி விட்டாள்.

விஷம் அருந்திய அந்தப் பெண் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டுள்ளார்,

# தமிழகத்தில் இந்தி திணிப்பு இருக்காது: பழனியாண்டி அறிக்கை

சென்னை செப் 19— தமிழகத்தில்இந்தி திணிப்பு இருக்காது என தமிழக இந்திரா காங்கிரஸ் தலைவர் பழனியாண்டிகூறினார்.

தமிழக இந்திரா காங்கிரஸ்கட்சித்தலைவர்பழனியாண்டி விடுத்துள்ள அறிக்கையொன்றில் தெரிவித்திருப்பதாவது:—

இந்தி பேசாத மாநிலங்களில் இந்தி மொழியை மத்திய அரசு திணிக்காது.

மத்திய அரசின் ஒரு அமைச்சகத்தைச் சேர்ந்த ஒரு பிரிவு அனுப்பிய அறிக்கையை அரசின் கொள்கைக் குறிப்பாக ஏற்கத் தேவையில்லை

இந்தி பேசாத மக்கள் விரும்பும்வரை ஆங்கிலம் தொடர்ந்து இந்தியாவின் ஆட்சிமொழியாக நீடிக்கும் என்பது தான். தற்போது உள்ள நிலையாகும்

இதைபல முறை காலஞ்சென்ற பிரதமா இந்திரா காந்தியும்வலியுறுத்தி வந்துள்ளார்.

பிரதமர் ராஜீவ்காந்தியும் இதை ஏற்றுக கொண்டுள்ளார்.

### விழிப்புடன் இருப்பீர்...

சில சுயநல அரசியல் வாதிகளின் பிடியல சிக்கிவிடாமல விழிப்புடன இருக்க வேண்டும

குறிப்பிட்ட இலாகாவினா அனுப்பிய அறிக்கையில் சில வாதங்கள் கருத்து வேறுபாட்டை ஏற்படுத்தக்கூடிய வகையில் அமைந்திருந்தது. தவறு உடனடியாக திருத்திக் கொள்ளப்பட்டது.



எனவே இந்தித் திணிப்பு என்ற கவலை யாருக்கும் வரவேண்டாம்.

இந்தி பேசாத மாநிலங்களுடன். மத்திய அரசு இந்தியில் தான் கடிதத் தொடர்பு கொள்ளும் என்பதும் தவறு. ஆங்கிலமே இதற்கு பயனபடுத்தப் படும.

இவ்வாறு பழனியாண்டி தெரிவித்துள்ளார்.

முன்னதாக டெல்லிசென்றிருநத பழனியாண்டி மத்திய அமைச்சர்கள் சிதம்பரம் காங்கிரஸ் பொதுச்செயலாளர் மூப்பனார் ஆகியோரை சந்தித்துப் பேசினார்.

# மத்திய அமைச்சரவையில் மாற்றம் என்ற வதந்தியால் டெல்லி அரசு பணிகள் மந்தம்

புதுடெல்லி, செப் 19. மத்திய அமைச்சரவையில் மாற்றம் ஏற்படும் என்ற வதந்தியால் மத்திய அரசுப் பணிகளில் லேசான மந்தம ஏற்பட்டிருக்கிறது.

மத்திய அமைச்சரவையில் விரைவில மாற்றம் ஏற்படும் என்று 2 வாரங்களுக்கு முன் வதந்தி ஏற்பட்டது. இதைத் தொடர்ந்து அந்த மந்திரி பதவி விலகுவார் அவர் புது மந்திரி ஆவார் என்று பலத்த வதந்திகள் நிலவுகின்றன. ஆனால் மந்திரி சபை மாற்றம் ஏற்படவில்லை

இதனால் அரசு பணிகள் பெரும தேக்கத்துக்குள்ளாகியுள்ளது.

## வதந்தி காரணமாக...

இந்த மந்திரி இந்த இலாகாவில் நீடிப்பாரா என்கிற சந்தேகம் சில இலாகாக்களில் ஏற்பட்டிருப்பதால், அந்த இலாகாப்பணிகள் துரிதமாக நடைபெறவில்லை,

சென்ற ஞாயிற்றுக்கிழமை [illegible]னிதமான நாளாக இருந்ததாகவும் அன்றைய தினம் புதிய அமைச்சர்கள் பதவியேற்க இருந்ததாகவும் டெல்லியில் பலத்த வதந்தி நிலவியது. அன்றைய தினம் ஜனாதிபதி கல்கத்தா நிகழ்ச்சியில்கலந்துகொண்டார் புதிய அமைச்சர்களுக்குப்பதவிப்பிரமாணம் செய்து வைப்பதற்காக கல்கத்தா நிகழ்ச்சிகளை ரத்து செய்துவிட்டு ஞாயிறு காலையே டெல்லிக்கு வருமாறு ஜனாதிபதி கோரப்பட்டிருந்தார். ஆனால் ஜனாதிபதி ஜைல் சிங்கோ தனது நிகழ்ச்சிகளை ரத்து செய்யாமல் நிகழ்ச்சிகளில் கலந்துகொண்டுவிட்டு ஞாயிறு இரவு தான் டெல்லி திரும்பினார், இதைதொடர்ந்து மந்திரி சபை மாற்றம் அப்போது நடைபெறவில்லை

அமைச்சரவை மாற்றம் ஏன் ஒத்திபோடப்பட்டது என்பது டெல்லியில்பிரதமருக்கு நெருங்கிய வட்டாரத்தினருக்கே தெரியவில்லை,

காங்கிரசிலிருந்து நீக்கப்பட்ட பிரணாப் முகர்ஜி, குண்டுராவ் கோஷ்டியினரின் தீவிர செயல்பாடுகள் இதற்குக் காரணமாக இருக்கலாம் என்று கருதப்படுகிறது.

## ரத்த பேதிக்கு 6 குழந்தைகள் பரிதாப சாவு

ராய்ப்பூர். செப், 19— மத்தியபிரதேசம் பிலேஸ்பூர் மாவட்டம் ஜவ்ராகிராமத்தில் ரத்த பேதியால் 6 குழந்தைகள் மாண்டன 35 குழந்தைகள் பாதிக்கப்பட்டுள்ளன.

ஜவ்ரா கிராமத்திற்கு போதிய மருத்துவ வசதிகள் அளிக்கப்படவில்லை என்றும்அரசாங்க டாக்டர்கள் பொறுப்பற்ற முறையில் நடந்து கொண்டார்கள் என்றும் கிராமமக்கள் தெரிவித்தனர்.



## ஆஸ்திரேலியாவில் இந்திய பொருட்களுக்கு கடும கிராக்கி

புதுடெல்லி, செப் 19— கடந்த ஆகஸ்ட் மாதம் 18 முதல் 23-ம் தேதி வரை சிட்னியில் நடைபெற்ற ஆஸ்திரேலிய சர்வதேச பொறியியல் கண்காட்சியில் இந்திய பொறியியல் நிறுவனங்கள் ரூபாய் 49 லட்சம மதிப்புள்ள ஏற்றுமதி ஆர்டர்களைப் பெற்றுள்ளன.

மேலும் ரூபாய் 4.17 கோடி மதிப்புள்ள ஏற்றுமதி வர்த்தகம் சம்பந்தமானபேச்சுவார்த்தைகள் நடைபெற்று வருகின்றன.

மின்சார மோட்டார், கைக்கருவிகள் கட்டிட இரும்பு சாமான்கள், தையல் இயந்திரம், பம்ப மோட்டார் பாகங்கள் மைக்ரோஸ்கோப், ஆய்வுக் கருவிகள் போன்றவை ஏற்றுமதிக்கான பேச்சுவார்த்தைகள் நடைபெற்று வருகின்றன.



Edited and published by K. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by India Anna D. M. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, MADRAS-29

## பாகிஸ்தான்ஊடுருவல்: எல்லைப்பகுதிக்கு மத்திய அரசு உத்தரவு

புதுடெல்லி செப்.19— இந்திய எல்லைக்குள் ஊடுருவல் செய்யும் பாகிஸ்தானியர்கள் மீது எல்லைப் பாதுகாப்புப் படையினரை கவிரகண்காணிப்புடன் இருக்கும்படி மத்திய அரசு உத்தரவிட்டுள்ளது தேவைப்பட்டால பாகிஸதான் ஊடுருவல் காரர்களை சுட்டு வீழ்த்தவும் உத்தரவு அனுப்பப் பட்டுள்ளது

இந்திய எல்லைப் பகுதிகளில் பாகிஸ்தானியர்கள் தந்திரமாக ஊடுருவல செய்கிறார்கள் இரவுநேரங்களில் எப்படியோ ரகசியமாக இந்தியாவுக்குள் அவர்கள் நுழைந்து விடுவதாகக் கூறப்படுகிறது.

பாகிஸ்தானியர்கள் இந்தியர்களைப் போல உடை அணிந்து சொந்தம் தோள்கள்மீதுசில மூட்டைகளை போட்டுக்கொண்டு வியாபாரிகள் போலவும் எல்லை பாதுகாப்புப்படையினரை ஏமாற்றிவிடுகிறார்கள்.

இப்படி ஊடுருவல் செய்யும் பாகிஸ்தானியர்கள் மீது கடும் நடவடிக்கை எடுக்குமாறு எல்லைப் பாதுகாப்புப் படையினருக்கு மத்திய அரசு உத்தரவுகள் பிறப்பித்திருக்கிறது.

எல்லைப் பகுதிகளில் பாதுகாப்புப் படையினர் தீவிர கண்காணிப்புடன் நடந்து கொள்ளவேண்டும் என்றும் எல்லைப் பாதுகாப்புப் படையினரை எதிர்க்கும் யாரையும் அந்தப்படையினர் சுட்டுவீழ்த்தலாம் என்றும் அரசு உத்தரவு அனுப்பியுள்ளது

சந்தேகத்துக்கு காரணமாக இருக்கும் ஆசாமிகள மீது கடுமையாக நடந்து கொள்ளுமாறு ஆணை பிறப்பிக்கப்பட்டுள்ளது.

எல்லைப் பாதுகாப்பு படையினர் எப்போதும் உஷார் நிலையில இருக்க அந்த புதிய உத்தரவுகள் கூறுகின்றன.

## பத்திரிகை அலுவலகம்முன்பு போராட்டம்

சென்னை. செப், 19— அம்பத்தூர். பாடி பகுதியில் உள்ள ஏராளமான தொழிற் சங்கங்களுக்கு தலைவராக இருப்பவர் ஜி. வேல்முருகன். வதந்தி வெளியிடும் வாரப் பத்திரிகையில அவரைப் பற்றி வெளியான ஒரு செய்தி தவறானது என்று டன்லப் தொழிற் சங்கம் உட்பட பல தொழிற்சங்க நிர்வாகிகள் அறிவித்து இருக்கிறார்கள்,

ஏற்கனவே வெளியிட்ட செய்திக்கு வருத்தம் தெரிவிக்க வேண்டும், இல்லையேல் அந்த பத்திரிக்கை அலுவலகம் முன்பு வரும் 24ந் தேதி போராட்டம்நடத்துவோம் என்று 15 தொழிற் சங்கங்களைச்சேர்ந்த நிர்வாகிகள் அறிவித்துள்ளனர்.



பலவான் அதிகாரி ரத்தினசாமியின் பேத்தி நடன அரங்கேற்ற விழாவில அமைச்சர் முத்துசாமி பங்கேற்று வாழ்த்தினார்.

## போலீஸ்காரரை கொன்ற இருவருக்கு தூக்கு உறுதி

சென்னை, செப் 19— கடமையைச் செய்த போலீஸ்காரரை கொன்ற இருவருக்கு தூக்குத்தண்டனை உறுதி படுத்தப்பட்டது,

தூத்துக்குடி கட்டபொம்மன தெருவில் அங்குசாமி மாடசாமி ஆகிய இருரவுடிகளும் [illegible] செய்து கொண்டிருந்தனர் பெண்களை கேலியும்-கிண்டலும் செய்தனர்.

அப்போது அந்த வழியாக போலீஸ்காரர் சண்முகசுந்தரம் வந்தார். அந்த 2 ரவுடிகளையும் போலீஸ்காரர்பிடிக்க முற்பட்டார்.

அப்போது மாடசாமியும் அங்குசாமியும் போலீஸ்காரரை அரிவாளால்வெட்டினர்

### சரமாரியாக வெட்டு

12 வெட்டுக்கள் போலீசார் உடலில் விழுந்தன சண்முகசுந்தரம் அந்த இடத்திலேயே இறந்தார்

அந்த இருவரும் கைது செய்யப்பட்டு வழக்குத் தொடரப்பட்டது.

இருவருக்கும் தூக்குத் தண்டனை விதித்து செசன்சு கோர்ட்டில் தீர்ப்பு அளிக்கப்பட்டது.

இருவரும் தீர்ப்பை எதிர்த்து அப்பீல் செய்தனர்

உயர்நீதிமன்ற நீதிபதிகள் ரத்னவேல்பாண்டியன மற்றும் கே.சண்முகம ஆகியோர் அடங்கிய டிவிஷன் பெஞ்சு வழக்கை விசாரித்தனர்

கடமை வீரராகத் திகழ்ந்த போலீஸ்காரரை வெட்டிக் கொன்ற இருவருக்கும் தூக்குத் தண்டனை உறுதி செய்கிறோம் என்று நீதிபதிகள தீர்ப்புக் கூறினர்.

## இந்தியை எதிர்க்கும் ஆற்றல்மிகு தலைவர் புரட்சித்தலைவரே

### வை. பெருமாள் முழக்கம்

திண்டுக்கல்,செப். 19- இந்தித்திணிப்பை எதிர்க்கும் ஆற்றல மிகு தலைவர் புரட்சித்தலைவரே என்று அண்ணா தொழிற் சங்கப் பேரவை பொதுச் செயலாளர் வை. பெருமாள் கூறினார்.

திண்டுக்கல்லில் நடந்த பேரறிஞர் அண்ணா பிறந்தநாள் விழாவில் வை. பெருமாள் பேசியதாவது:—

இந்தித் திணிப்பை என்றும் உறுதியாக எதிர்க்கும தலைவர் தான் முதல்வர் புரட்சித்தலைவர். அண்ணாவின் இலட்சியத்தை நிறைவேற்ற அயராது பாடுபட்டு வருபவர் புரட்சித் தலைவர் அவர்கள்.

மொழிக்கொள்கையிலும் உறுதியாக இருந்து அண்ணாவின் இருமொழி கொள்கையை கட்டிகாத்து வருகிறார் இந்தித்திணிப்பு எந்த உருவத்தில் வந்தாலும், எந்த வழியில் வந்தாலும் அதைத்தடுத்து நிறுத்தி தமிழையும் தமிழகத்தையும் தமிழ்ப் பெருமக்களையும் காக்கும் அரணாக நமது இதய தெய்வம் புரட்சித் தலைவர் அவர்கள் இருந்து வருகிறார்கள்.

1965—ல் இந்தி எதிர்ப்புப் போரில் பங்கேற்ற அன்றைய இளைஞர் பட்டாளமும்.இன்றும் எந்தத் தியாகத்தையும் செய்யத் தயாரான நிலையில். புரட்சித்தலைவரின் பெரும் படையில் தயாராக இருக்கிறது என்பதை இந்தி திணிப்பாளர்களுக்குத்தெரிவித்துக் கொள்கிறோம்.

இவ்வாறுவை.பெருமாள் பேசினார்.



## கர்நாடக குடிசைமாற்று செயலாளர் அங்கமுத்துவுடன் ஆலோசனை

சென்னை,செப்.19— கர்நாடக மாநில குடிசை பகுதி மாற்று வாரியத்தின் செயலாளர் பி.ஹனுமந்த ரெட்டி தமிழக குடிசை மாற்று வாரியத் தலைவர் டாக்டர் அங்கமுத்துவை அவரது அலுவலகத்தில் சந்தித்து குடிசைப்பகுதி மாற்று வாரியப் பணிகள் பற்றி கேட்டறிந்தார்.

பின்னர் மாலை டொம்மிங்குப்பம் கஜலட்சுமி காலனி, மற்றும பிள்ளையார் கோவில்தோட்டம் ஆகிய குடிசை மாற்று வாரிய திட்டப்பகுதிகளை சென்று பார்வையிட்டார்.

வாரிய உறுப்பினர்களும் அதிகாரிகளும் உடன் சென்றனர்.

## சென்னை மாநகராட்சி பள்ளிக் கட்டிடங்கள்: ப. உ. ச. அறிவிப்பு

சென்னை. செப் 19 தனியார் இடங்களில் உள்ளசென்னை மாநகராட்சி பள்ளி கூடங்களுக்கு விரைவில்சொந்தக் கட்டிடம் கட்டப்படும்என அமைச்சர் ப.உ.ச. கூறினார்

ஏழு கிணறு புனிதசேவியர் தெருவில் சுமார் ரூபாய் 2.58 லட்சம் செலவில் மாநகராட்சியால் கட்டப்பட்ட புதிய நடுநிலைப் பள்ளி கட்டிடத்தை உள்ளாட்சி துறை அமைச்சர் ப. உ. சண்முகம் நேற்று மாலை திறந்து வைத்தார்.

அதே பகுதியில் மலையப்பன் தெருவில் உள்ள பள்ளி பழுதடைந்த நிலையில் இருப்பதால் இப் புதிய கட்டிடம் கட்டப் பட்டது.

விழாவில் அமைச்சர் பேசும்போது ப.உ.ச.கூறியதாவது:

சென்னையில் உள்ள 15 மாநகராட்சி பள்ளிகள் மட்டுமே தனியார் கட்டிடங்களில் இயங்கி வருகின்றது அந்த இடங்களை அரசு கையகப்படுத்திபுதிய கட்டிடங்களை கட்ட முடிவு செய்துள்ளது.

அண்ணாசாலை பெரியார் சாலை போன்ற பெரியசாலைகளில், நிறுத்தக் கூடாத இடங்களில் கார்களை நிறுத்தி போக்குவரத்து இடைஞ்சல் செய்கின்றனர். இது போன்ற செயல்களைத் தவிர்க்க பொதுமக்கள் ஒத்துழைக்க வேண்டும போக்குவரத்து நெரிசல் மிக்க முக்கிய சாலைகளை ஒரு வழிப் பாதையாக மாற்ற அரசு திட்டமிட்டுள்ளது.

மத்திய அரசு ஊழியர்கள் இந்தியை படிக்க வேண்டும் என்று குறிப்பு அனுப்பி. அதைஎதிர்த்தவுடன் படிக்கவேண்டாம் கையெழுத்து மட்டும் போடுங்கள் என்று மத்திய அரசு மாற்று அறிவிப்பு வெளியிடுகிறது. எதற்காக அந்த உத்தரவைப் போடவேண்டும்

மத்திய அரசு இந்தியை புகுத்தினால் ஏற்றுக்கொள்ள தமிழ்நாடு தயாராக இல்லை. இந்தியின் மீது மக்களுக்கு வெறுப்பு இல்லை அதை வலுக்கட்டாயமாக திணித்து தமிழ்நாட்டு மக்கள் இளைஞர்களின் உணர்ச்சிகளுக்கு ஆளாக வேண்டாம் என்று கேட்டுக் கொள்கிறேன்.

இப்போது திறந்து வைத்தபுதிய கட்டிடத்தின் மேல் மாடி உடனடியாக கட்டப்படும்

இவ்வாறு அமைச்சர் பேசினார்.

விழாவிற்கு மாநகராட்சி தனி அதிகாரி இ. சந்திரசூடன் தலைமைவகித்தார் ஆணையாளர்சாந்த ஷீலா நாயர் வரவேற்றுப் பேசினார் தனி அலுவலர் அப்துல் ஜப்பார் நன்றி கூறினார்.

# வீழ்ச்சியுற்று கிடந்த தமிழகத்தை எழுச்சி பெறவைத்தவர் அண்ணா

## அமைச்சர் சவுந்தரராசன் பேச்சு

சென்னை செப்.19 வீழ்ச்சியுற்று இருந்த தமிழ் சமுதாயத்தின் எழுச்சிக்கு திருப்பள்ளி எழுச்சி பாடியவர் பேரறிஞர் அண்ணா என்று அமைச்சர் சவுந்தரராசன் கூறினார்.

அமைச்சர் சவுந்தரராசன் வானொலியில் பேசியதாவது:-

பேரறிஞர் அண்ணா அவர்கள் பேச்சிலே அரசியலிலே தமிழ் இலக்கியத்திலே, சமுதாயப்பணியிலே பொருளாதாரத்துறையிலே வரலாறு படைத்து வகித்த பதவிக்கெல்லாம் பெருமை சேர்த்து தமிழக வரலாற்றில் ஒரு புதிய சகாப்தமாக திகழ்ந்தார். மக்களாட்சி தத்துவத்திற்கு தனிவிளக்கம் தந்து அரசாங்கத்தை மக்களின் வாயிற்படிக்கு கொண்டுவந்த மக்கள் தலைவர் பேரறிஞர் அண்ணா வில்லில் இருந்து புறப்பட்ட அம்புபோல அவருடைய கருத்துக்கள் மக்களிடையே ஆணித்தரமாக வலுவும் உறுதியாகவும் உலாவந்தன என்றால் அதற்கு காரணம் அவருடைய பேச்சாற்றல் ஆகும்.

பிரச்சினைகளுக்கு அமைதியாக விளக்கம் தந்து தெளிவை ஏற்படுத்துவார். தன் பேச்சை உணர்ந்து தன்னை நாடி வருகின்ற மக்கள் கூட்டத்தை பார்த்து தனக்கு பொறுப்பு அதிகமாவதை உணர்ந்த அரசியல் வாதி பேரறிஞர் அண்ணா.

பாமர மக்களும் புரிந்து கொள்ள வேண்டும் என்பதிலே கண்ணும் கருத்துமாய் இருந்தவர்.

### ஆற்றல் மிக்க மேடைப் பேச்சு

மேடைப் பேச்சில் வரலாற்று சிறப்பு மிக்க மாற்றத்தை ஏற்படுத்தியவர் பேரறிஞர் அண்ணா. வீழ்ச்சியுற்ற தமிழ் சமுதாயத்தின் எழுச்சிக்கு திருப்பள்ளி எழுச்சி பாடியவர் பேரறிஞர் அண்ணா.

எதிர் அணியினரும் ஏற்றுக்கொள்ளுகிற விதத்தில் வாதங்களை நேர்மையாகவும் உறுதியாகவும் எடுத்துரைத்த செயல் வீரர் பேரறிஞர் அண்ணா, பேரறிஞர் அண்ணா [illegible] சுவைதை கேட்கின்ற [illegible] கூடி இருக்கின்ற மக்கள் மகுடியின் நாதத்திற்கு தலையாட்டுகிற நாகங்களை போல் தன்னை மறந்து இருப்பர்

[illegible] எடுத்துச் சொன்னவர் பேரறிஞர் அண்ணா தமிழ் இலக்கியங்கள் சுட்டிக்காட்டுகின்ற: ஒன்றே குலம் ஒருவனே தேவன், எல்லோரும் ஓர்நிலை நாமார்க்கும் குடியல்லோம்; போன்ற உன்னத கருத்துகளுக்கு புது வடிவம் தந்து பிரச்சாரம் புரிந்தார்.

மொழிப்பற்று, இனப்பற்று, தேசப்பற்று அனைத்தும் ஒருங்கே அமையப்பெற்ற இயக்கத்தில் ஒவ்வொன்றிற்கும் இடையே உள்ள நுண்ணிய வேறுபாட்டையும் தன் நிலை விளக்கத்தையும், எந்த ஒரு இக்கட்டான சூழ் நிலையிலும் வலுவாக ஆதாரம் காட்டிப் பேசியவர் பேரறிஞர் அண்ணா.

நாட்டின் ஆளும்கட்சிக்கு எதிர்க்கட்சி அவசியம் என்பதை அண்ணா எடுத்[illegible] தனிப்பட்ட தன்மையுடையது.

### மக்களுக்கு புரியும்படியாக...

மாற்றுக் கட்சி இல்லாத ஜனநாயக அரசு [illegible] இல்லாத கரையில்லாத ஆறு. மூக்கணாங்கயிறு இல்லாத மாடு, என பாமர மக்களுக்கும் புரியும்படி உவமைகளைச் சொல்வதில் வல்லவர். தொண்டர்களை [illegible] போது அவர் சொல்லுவார் "என் தம்பிமார்களின் முகங்களைப் பார்க்கிறேன். அங்கே சேரன் செங்குட்டுவன் நிழலாடுகிறான். அவர்களுடைய [illegible] களைப் பார்க்கிறேன் அங்கே புத்தம் புதிய புறநானூறு புன்முறுவல் [illegible] படைக் காண்கிறேன் [illegible] ஆற்றல் மிக [illegible] களை பார்க்கிறேன் அங்கே அன்றொரு நாள் தோல்வியுற்ற கனக விசயர்களைப் பார்க்கிறேன். உடனே ஒரு கணம் என்னையே நான் எண்ணிப் பார்க்கிறேன். இப்படிப்பட்ட அஞ்சாநெஞ்சர்களை அருமை தம்பிகளாகப் பெறும்பேறு பெற்றேனே எனப்பெரும் களிப்படைகிறேன்

நாவன்மையை முதலீடாக வைத்துதான் நாம் அரசோச்சும் உரிமையைப் பெற்றோம் என்று அண்ணா ஒருமுறை கூறியது நினைவு கூறத்தக்கது. கம்பராமாயண குறித்த சொற்போரில் நாவலர் சோமசுந்தர பாரதியுடனும் சொற்செல்வர் ரா.பி. சேதுப்பிள்ளையுடனும் வாதிட்டு வெற்றி பெற்றார் என்றால் அண்ணாவின் நாவன்மையை என்ன என்பது?

### விவாதத் திறமை

நாவலரும் சொற்செல்வரும் வழக்கறிஞர்கள் அண்ணாவோ பொருளாதார மேதை ஆனாலும் இரு வழக்கறிஞர்களும் தோல்வியுறும் வண்ணம் அண்ணா தன் கருத்துக்களை தகுந்த வாதத் திறமையுடன் குவித்தார். மாற்றுக் கட்சிக்காரர்கள் தாக்கிப் பேசும் போது கூட தன் பேச்சில் பண்பு கெடாமல் நாகரிகம் கெடாமல் பேசும் தன்மை அண்ணாவிற்கே உரியது.

ஒருமுறை பண்டித ஜவகர்லால் நேருவைப்பற்றி ஒரு மேடையில் குறிப்பிட்ட அண்ணா, அவர் கட்டி முடித்த கோபுரம், நான் கொட்டிக் கிடக்கும் செங்கல் என்று கூறிவிட்டு கோபுரத்தின் வளர்ச்சி அவ்வளவுதான் ஆனால் கொட்டி கிடக்கும் செங்கல் கோபுரத்தை விட உயரமாக எழும் வல்லமை உடையது என்றார்.

ஒருமுறை நாடாளுமன்றத்தில் அண்ணா பேசிய பேச்சு வெளியே நின்றவர்களை உள்ளே ஈர்த்து அழைத்தது மட்டுமின்றி நேரம் முடிந்துவிட்ட பிறகும் மரபை மீறி பேசுவதற்கு அனுமதிக்கப்பட்டார். நேருபெருமான் அவர் பேச்சை ரசித்தார். லால்பகதூர் சாஸ்திரி மனம் திறந்து பாராட்டினார்.

### நேருவுக்கு ஆதரவு

விலைவாசிப் போராட்டத்தில் கலந்து கொண்டு திரும்பிய போது. சீனாக்காரன் எல்லையில் தொல்லை கொடுத்துக் கொண்டிருந்தான். அந்த நேரத்தில் நேரு பெருமானுக்கு அவருடைய அறைகூவலை ஏற்று தன்னுடைய கரத்தை துணைக்கரமாகத் தருவதாகச் சொன்னவர் பேரறிஞர் அண்ணா. 'வீடிருந்தால் தானே தப்பி ஓட்ட முடியும் அதுபோல இந்திய நாடு இருந்தால் தானே திராவிட நாடு பெறமுடியும் என்று சொன்னவர் பேரறிஞர் அண்ணா,

ஏழைகளுக்குப் படியரிசி திட்டத்தை அறிமுகம் செய்ய முனைந்த அண்ணா முதன் முதலில் சென்னையிலும் கோவையிலும் அரசு திட்டத்தை அமலாக்கினார் அப்போது சட்டமன்றத்தில் எதிர்க்கட்சி உறுப்பினர் ஒருவர், இவ்வாறு இரண்டு இடங்களுக்கு மட்டும் படியரிசித் திட்டத்தை அமல்படுத்தி விட்டு ஏனைய இடங்களை விட்டுவிடுவது ஒரு கண்ணிலே வெண்ணெயும் அடுத்த கண்ணிலே சுண்ணாம்பும் வைப்பது போலாகும் என்று குறிப்பிட்டார். அப்போது அண்ணா அவர்கள் தமக்கே உரிய பேச்சாற்றலால் எதிர்க்கட்சி உறுப்பினரின் வினாவுக்கு சரியான விடையை அளித்தார்.

"ஒரு கண்ணிலே வெண்ணெயும் மறு கண்ணிலே சுண்ணாம்பும் அல்ல, ஒரு வெறுங்கையிலே சுண்ணாம்பு தடவிவிட்டு மறு வெறுங்கையிலே சுண்ணாம்பு தடவுவது போல் ஆகும், மற்ற இடங்களில் சிறிது காலம் பொறுத்துப் படியரிசி வழங்கப்படும்" என்று குறிப்பிட்டார் அண்ணா.

அண்ணாவின் பேச்சு கூர்மையானது. நேர்மையானது; எதிரிகளையும் நண்பர்கள் ஆக்கிக் கொள்ளும் திறம் பெற்றது நண்பர்களை மகிழச்செய்யும் ஆற்றல் கொண்டது.

### சிரிக்க வைப்பார்

அடிக்கடி கேள்வி கேட்ட விநாயகத்தின் மீது நமது சட்டமன்ற உறுப்பினர்கள் கோபப்பட்ட போது அண்ணா அவர்கள் அவர் வினாவிற்கு நாயகன், எனவே கேட்டுக்கொண்டே தான் இருப்பார் எனக்கூறி அனைவரையும் சிரிக்க வைத்தார்.

எந்த விஷயத்தையும் பிறரது மனதில் தைக்கும் படியாகவும் பதியும் படியாகப் பேசுவதில் அவருக்கு நிகர் அவரேதான்.

சாமானிய மக்கள் எல்லாம் இன்று ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக்கொள்வதற்கு வழி வகுத்தது அவரது பேச்சாற்றல் என்றால் அது மிகையாகாது.

வேற்று மொழிச் சொற்கள் விளையாடிய பேச்சு மேடையில் இன்று அன்னைத் தமிழ்ச் சொற்களின் முழக்கம் கேட்பதற்கு வழி வகுத்தது அண்ணாவின் பேச்சாற்றல்தான்.

### மேடைப் பேச்சு வரலாறு

ஆங்கில மோகத்தில் அலைந்து திரிந்த நமது தமிழக மக்கள் இன்று தமிழில் பேச விரும்புவதற்குக் காரணம் பேரறிஞர் அண்ணா உருவாக்கிய மேடைப் பேச்சு வரலாறு தான்.

ஆமைகளாய், ஊமைகளாய் அடிமைப்பட்டுக்கிடந்தவர்கள்— கடை நிலையில் நெளிந்தவர்கள் எல்லாம் இன்று முதன்தர பேச்சாளர்களாகத் திகழ்வதற்கு காரணம் அண்ணா அமைத்துக்கொடுத்த பேச்சுமேடைதான்

பேரறிஞர் அண்ணா தமிழிலே மட்டும் பேச்சாளர் அல்ல. ஆங்கிலத்திலும் தலைசிறந்த பேச்சாளர். அண்ணாவின் பேச்சாற்றல். தமிழகத்தில் மட்டுமல்ல இந்திய திருநாட்டிலும் வெளிநாடுகளிலும் தமிழுக்கும்- தமிழ்ப்பெரு மக்களுக்கும் சிறப்பையும் பெருமையும் தேடித்தந்திருக்கிறது என்பது உலகறிந்த உண்மை.

இவ்வாறு அமைச்சர் சவுந்தரராசன் பேசினார்:

# விமானத்தில் அமர்ந்தவாறு டெலிபோனில் பேச வசதி

வாஷிங்டன் செப். 19— அமெரிக்காவில் விமானப் பயணிகள் தாங்கள் அமர்ந்துள்ள இடத்தில் இருந்தபடியே தாங்கள் விரும்புபவர்களுடன் தொலைபேசியில் பேசும் வசதி இன்னும் சில மாதங்களில் ஏற்பட்டுவிடும்.

'ஏர்போன் இன்கார்ப்பரேஷன்' என்னும் அமெரிக்கத் தகவல் தொடர்பு நிறுவனம் இதற்கான ஏற்பாடுகளைச் செய்து வருகிறது.

இந்த நிறுவனம், ஏற்கெனவே 23 விமான நிறுவனங்களுக்கு விமான டெலிபோன் வசதி செய்து கொடுத்துள்ளது;

ஒவ்வொரு விமானத்திலும் ஏழெட்டு டெலிபோன்கள் பொருத்தப்பட்டுள்ளன; பயணிகள் தங்கள் இருப்பிடத்திலிருந்து எழுந்து சென்று இந்த டெலிபோன்களில் பேச வேண்டும்.

1984 அக்டோபர் மாதத்தில் ஏற்படுத்தப்பட்ட இந்த வசதியின்படி இதுவரை விமானங்களிலிருந்து 10 லட்சத்துக்கும் அதிகமான டெலிபோன் கால்கள் செய்யப்பட்டுள்ளன. விமானத்திலிருந்து அமெரிக்காவுக்கும். கனடாவுக்கும் டெலிபோனில் பேச முதல் 3 நிமிடங்களுக்கு ஏழரை டாலர்களும் அதன் பிறகு ஒவ்வொரு நிமிடத்துக்கும் ஒன்றேகால் டாலரும் கட்டணம் வசூலிக்கப்படுகிறது

இனி, விமானப் பயணிகள் தங்கள் இருக்கையை விட்டு எழுந்திருக்கத் தேவையில்லாமல் விமான சீட்களிலேயே தொலைபேசியைப் பொருத்துவதற்கு 'ஏர்-போன்' நிறுவனம் ஏற்பாடு செய்து வருகிறது.

# கல்வி வளர்ச்சியில் தொலைக்காட்சி பங்கு: அரங்கநாயகம் கருத்து

சென்னை, செப். 19— கல்வி வளர்ச்சியில் தொலைக்காட்சி பெரும் பங்கு வகிக்கிறது என அமைச்சர் அரங்கநாயகம் கூறினார்.

தமிழக பள்ளிக்கல்வி இயக்ககத்தின் தொழில் நுட்பவியல் பிரிவின் சார்பாக கல்வி தொலைகாட்சி படப்பதிவுக்கூட கட்டிடத்தின் அடிக்கல் நாட்டுவிழா சென்னையில் நடைபெற்றது.

பொதுப்பணித் துறை அமைச்சர் ஒய் எஸ் எம். யூசுப் தலைமையில் கல்வி அமைச்சர் அரங்கநாயகம் புதிய கட்டிடத்திற்கு அடிக்கல் நாட்டிப் பேசினார்.

தமிழ்நாடு பாடநூல் நிறுவன மேலாண்மை இயக்குநர் கா. லியாகத் அலிகான், பள்ளிக்கல்வி இயக்குநர் கோபாலன், மற்றும் இணை துணை இயக்குநர்கள், பொதுப்பணித் துறை தலைமைப் பொறியாளர், மற்றும் கல்வித் துறையைச் சார்ந்த அதிகாரிகள்- அலுவலர்கள் பலரும் விழாவில் கலந்து கொண்டனர்.

அமைச்சர் அரங்கநாயகம் பேச்சையில் குறிப்பிட்டதாவது:-

தமிழக மக்களுக்கு நல்ல கல்வியைத் தரவேண்டும் என்ற அடிப்படையில் தமிழக அரசு பல்வேறு திட்டங்களையும், முயற்சிகளையும் மேற்கொண்டு வருகிறது. அந்த அடிப்படையில் தான் இன்று இந்தப் புதிய முயற்சி தொடங்கப்படுகிறது.

### விஞ்ஞான வளர்ச்சி

விஞ்ஞான வளர்ச்சியைப் பயன்படுத்தி மாணவர்களுக்கு கல்வி கற்பிக்க வேண்டும் என்ற நோக்கத்தில் தான் இந்த தொலைக்காட்சி படப்பதிவுக் கூடம் அமைக்கப்படுகிறது.

இந்தக் கட்டிடம் கட்டி முடித்து கல்வி சம்பந்தமான படப்பதிவு தொடங்கி அது தொலைக்காட்சி நிலையம் மூலம் ஒளிபரப்பப்படும்.

இது விஷயத்தில் டி. வி. நிலையத்தாரோடு பள்ளிக் கல்வி தொழில் நுட்பவியல் பிரிவு இணைந்து செயல்பட வேண்டும்

இதன்மூலம் மாணவர்கள் விஞ்ஞானத் தொழில் நுட்ப கல்வி அறிவு பெற்று முன்னேற வேண்டும்

### ஆசிரியர் கடமை

கல்வி பயிற்றுவிப்பதில் ஆசிரியர்கள் பொறுப்பு உணர்ச்சியோடு பாடுபட வேண்டும், அப்படிச் செய்தால் தான் நம்முடைய மாணவர்கள் பிற மாநில பிற நாட்டு மாணவர்களுக்குச் சமமாக முன்னேற முடியும்.

சொல்லித்தரும் முறையில் புதுமை வேண்டும். மாணவர்களுக்கு கல்வியில் நாட்டம் ஏற்படும் வகையில் அவர்கள் ஆசிரியர்களோடு ஒத்துழைக்கும் தன்மையில் சொல்லிக் கொடுக்க வேண்டும்,

நேரடியாக சொல்லிக் கொடுப்பதைவிட தொலைக்காட்சி மூலம் வண்ணத்தில் பாடங்கள் காட்டப்படும் போது மிக எளிதாகப் புரியும். இதை அமெரிக்கா சென்றிருந்த போது நானே நேரடியாக கண்டு உணர்ந்தேன்.

நம்மால் பார்க்கமுடியாத ஒரு காட்சியை நான் அங்கு தொலைக்காட்சி மூலம் கண்டேன்.

மனிதனின் இரத்தநாளங்களிலே ஓடுகின்ற இரத்தத்தை அதில் காட்டினார்கள். இந்த இரத்த ஓட்டம் பற்றி மாணவர்களுக்கு சொல்லித்தர வேண்டும் என்றால் ஒரு பீரியடு வேண்டும். அப்படி இருந்தாலும் கூட இவ்வளவு துல்லியமாக விளக்க முடியாது. இதுபோன்ற வசதி இந்த தொலைக்காட்சி கல்வி ஒளிபரப்பு மூலம் நமக்குக்கிடைக்கிறது.

### நவீன உத்திகள்

இதுபோன்ற நவீன உத்திகளைக் கையாள்வதின் மூலம் மாணவர்கள் நல்ல விஞ்ஞான அறிவினைப் பெற முடியும்.

இந்த தொலைக்காட்சி மூலம் கல்விகற்பிக்க பாடங்களைப் படமாக எடுக்கிறவர்கள் மிகத்திறமைவாய்ந்தவர்களாக இருக்க வேண்டும்.

ஒரு திரைப்படம் எடுக்கத் தேவையான அத்தனை திறமைகளும் விஞ்ஞானபூர்வ அடிப்படையில் இருக்கவேண்டும் அதாவது நாடு முழுதும் உள்ள தறமைமிக்க ஆசிரியர்கள் - எழுத்தாளர்கள்- விஞ்ஞான ஆர்வலர்களை தேர்ந்தெடுத்து பாடங்களை - காட்சிகளைத் தேர்வு செய்து— அவைகளை படப் பதிவு செய்யவேண்டும்.

### தமிழகம் ஆறாவது இடம்

இந்தியாவிலேயே இந்த முயற்சியில் தமிழகம் 6-வது இடத்தைப் பெற்று இன்று இந்த முயற்சியைத் தொடங்கியுள்ளது

இது விரைவில் நிறைவேற்றப்பட்டு மேலும் பலபுதிய திட்டங்கள் தொடங்க அனைத்து அதிகாரிகளும் அலுவலர்களும் ஒத்துழைப்புத் தர வேண்டும்

இவ்வாறு அமைச்சர் அரங்கநாயகம் பேசினார்.

# முதல்வருக்கு சித்த மருத்துவர்கள் நன்றி

சென்னை, செப் 19— சென்னை செனாய் நகர் அன்னை தமிழ் மருத்துவமனையில் சித்தர்கள் முகாம் நடைபெற்றது. டாக்டர் பி.வே. பரசுராமன் தலைமை தாங்கினார், டாக்டர் மு. சௌரிராசன் சிவானந்த ஜிகணபதி சுவாமிகள் ஆகியோர் முன்னிலை வகித்தனர்.

சித்தர் அடிகள். டாக்டர் மருசமுத்து டாக்டர் அப்பாதுரையார் மற்றும் பல சித்த மருத்துவர்கள் இம்முகாமில் கலந்து கொண்டு பேசினர்.

பேரறிஞர் அண்ணா பிறந்த தினமான செப்டம்பர் 15 முதல் 60 வயதுக்கு மேற்பட்ட, பணிசெய்ய இயலாத சித்த மருத்துவர்களுக்கு மாதம் ரூபாய் 150 வீதம் உதவித்தொகை வழங்க முன்வந்துள்ள தமிழக அரசுக்கும் தமிழக முதலவர் டாக்டர் புரட்சித் தலைவர் அவர்களுக்கும் அன்னை சித்த வைத்திய சங்கத்தின் சார்பாகவும். சித்தர்கள் முகாம் சார்பாகவும் நன்றி தெரிவித்து தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

# ஊட்டியில் வனத்துறை கருத்தரங்கு

உதகமண்டலம் செப்19 தேசிய வனத்துறை வள கருத்தரங்கு ஒன்று இம்மாதம் 24முதல் 26ம் தேதி வரை 3 நாட்கள் உதகமண்டலத்தில் நடைபெறவுள்ளது. மத்திய சுற்றுப்புற சூழ்நிலைகாடுகள் இலாகா நடத்தும் இக்கருத்தரங்கினை மத்திய சுற்றுப் புற சூழ்நிலை காடுகள் துறை இணையமைச்சர் இம்மாதம் 24ம் தேதி துவக்கிவைப்பார் பிரபல விஞ்ஞானிகள் சுற்றுப் புற சூழல் நிபுணர்கள் வன அதிகாரிகள் வனவிலங்கு நிபுணர்கள் நிர்வாகிகள்; அமெரிக்கா ரஷ்யா, பிரான்சு, மெக்சிகோ நாட்டு நிபுணர்கள் ஆகியோர் இக்கருத்தரங்கில் பங்கு கொள்கின்றனர்.

# சிறுதொழில் துறையில் 1கோடி மக்கள் ஈடுபாடு

புதுடெல்லி. செப். 19— சிறு தொழில் துறையில் ஒருகோடி மக்கள் ஈடுபட்டிருப்பதாக பிரதமர் ராஜீவ் கூறினார்.

தேசிய சிறுதொழில் கருத்தரங்கினை நேற்று டில்லியில் துவக்கி வைத்து. பிரதமர் ராஜீவ்காந்தி பேசினார். அவர் கூறியதாவது:—

சிறுதொழில் வளர்ச்சிக்கு வானமே எல்லை என பண்டித நேரு முழங்கினார் அதற்கேற்ப வானத்தை முட்டும் அளவுக்கு சிறு தொழில் வளர்ச்சிப் பெற ஏதுவாக உச்ச வரம்புகளை அரசு நீக்கியுள்ளது.

சிறுதொழில் நமது தொழில் வளர்ச்சிக்கு முக்கிய அங்கமாக விளங்குகிறது. இதற்கேற்ப, நடுத்தர, பெரிய தொழில்களுடன் சிறுதொழில் ஒருங்கிணைக்கப்பட வேண்டும்.

புதிய மாற்றங்களுக்கு ஏற்ப மாற்றிக்கொள்ள இயலாத போது அரசு பாதுகாப்பினை நாடுவது இயல்பே ஆனாலும் அரசு பாதுகாப்பினை அளவுக்கு மிஞ்சி சார்ந்திருப்பது நல்லதல்ல முழுமையான தொழில் முன்னேற்றத்துக்கு தேவையான வலுவினை பெற அரசு ஆதரவை சார்ந்திருப்பது உதவாது.

### விஞ்ஞான உணர்வு

மேலும் இரண்டு அம்சங்கள் மிக முக்கியமானவை, சிறு தொழில் வளர்ந்து. நடுத்தரத் தொழிலாகவும். பெரிய தொழிலாகவும் வளர்ந்து புதியவர்கள் சிறு தொழில் துவக்க வகை செய்ய வேண்டும். மிகத் திறமையான தொழில் முறையே நமது தற்போதைய தேவை

மக்களிடையே விஞ்ஞான உணர்வினை வளர்ப்பது இரண்டாவது கட்டம் அடிமட்டத்தில் விஞ்ஞான உணர்வினை ஊட்ட ஊக்குவிக்க சிறுதொழில்களால் இயலும்.

### ஏற்றுமதியில் பெரும் பங்கு

கடந்த ஆண்டுகளில் சிறு தொழில் நன்கு வளர்ச்சியடைந்துள்ளது.

ஒரு கோடிக்கும் மேற்பட்டோர் சிறுதொழில் உற்பத்தியில் ஈடுபட்டுள்ளனர். நாட்டின் மொத்த உற்பத்தியில் இரண்டில் ஒரு பங்கினையும் ஏற்றுமதியில் நான்கில் ஒரு பங்கினையும் சிறு தொழில் வழங்குகின்றது, இவ்வாறு பிரதமர் ராஜீவ் கூறினார்.

# தி. மு. க. நகரசபை தலைவர் போக்கு: கழகம் கண்டனம்

சேலம், செப். 19— சேலத்தில் 28 இடங்களில் குடிநீர் குழாய் இணைப்பு கொடுக்க அரசு அனுமதிக்கவில்லை என்றும் அதற்காக 25 ஆயிரம் பேருடன் உண்ணாவிரதம் இருப்பதாக கூறிய நகரசபை தலைவர் சூடாமணி போக்குக்கு கழகத்தினர் கண்டனம் தெரிவித்துள்ளனர்.

இதுபற்றி நிருபர்களிடம் சேலம் தொகுதி கழக எம்.எல்.ஏ. கிருஷ்ணராஜ் கூறியதாவது

தேர்தல் காலத்தில் புரட்சித்தலைவர் மக்களிடம் தந்த வாக்குறுதிகளை இதுவரை நிறைவேற்றிக்கொண்டு தான் வருகிறார். இதனால் தான் மக்களிடம் தமிழக அரசின்மேல் நல்ல நம்பிக்கை இருந்து வருகிறது. தற்போதைய நெல்லை, அருப்புக்கோட்டை வெற்றியும் இதைத்தான் காட்டுகிறது.

கழக அரசை திமுகவினர் வீணாக குறை கூறிக் கொண்டுதான் வருகிறார்கள். தற்போது இவர்களுடைய உண்ணாவிரதப் போராட்டமும் இதைத்தான் உணர்த்துகிறது. நகரசபை பஞ்சாயத்து தேர்தலின்போது தி.மு.க. மக்களிடம் கொடுத்த வாக்குறுதிகளை இதுவரை நிறைவேற்றவில்லை. தேர்தலபோது மேட்டூர் அணையிலிருந்து குடிநீரை சேலத்துக்கு கொண்டுவருவதாக சூடாமணி கூறினார். இதுவரை அதற்காக முயற்சியை அவர் செய்யவில்லை. தண்ணீர் வந்தபாடுமில்லை.

சேலம் 1-வது தொகுதி சட்டமன்ற உறுப்பினர் எனும் முறையில் நான் சேலம் நகரத்தில் 69 இடத்தில் ஆழ்துளை கிணறு தோண்ட பரிந்துரை செய்திருக்கிறேன், இதுவரை வேலைகளை மேற்கொள்ளவேயில்லை.

தி.மு.க உறுப்பினர்களின் வார்டுகளில் மட்டும் வசதிகளை செய்து வருகிறார் கழக காங்கிரஸ கவுன்சிலர் வார்டு பக்கம் அவர் வருவதேகிடையாது இந்த அளவுக்கு கட்சி பாகுபாட்டுடன் நடந்து கொள்ளும் ஒரு நகர சபைத் தலைவர் தற்போது [illegible] தமிழக அரசை எதிர்த்து உண்ணாவிரதம் இருக்கப் போகிறாராம்! அதுவும் 25 ஆயிரம் பேருடன்! சேலத்தில் எங்கே 25 ஆயிரம் தி.மு.க. வினர் உள்ளனர்?

இவ்வாறு அவர் கூறினார்.